உ

# ஔவையார்

அருளிச்செய்த

# குறள்

## மூலபாடம்.

---

சுத்தபாடமாக வழங்குவிக்கும் பொருட்டுத்
தொண்டமண்டலத்து வேளாளர்களில்
உயர் துளுவவேளாளராகிய
தேனாம்பேட்டை

**வேங்கடகிருஷ்ணமுதலியார்**

குமாரர்

**சின்னத்தம்பிமுதலியார்**

காஞ்சிபுரம்

**சபாபதிமுதலியாரால்**

பலபிரதிகளைக்கொண்டு பரிசோதிப்பித்துச்
சென்னைக்கல்விச்சங்கத்துத்
தமிழ்ப்புலவர்

**திருவேங்கடாசலமுதலியார்**

சரஸ்வதிஅச்சுக்கூடத்திற்பதிப்பித்தார்.



விகாரி௵ புரட்டாசி௴
இதன்விலை-அணா-௪.



உ

ஔவைகுறள்.

# அதிகாரவகராதி.





ஆ அதிகாரம் - ௩௧ ஐ - குறள்
[ ௩௱௰. ]





# அவையடக்கம்.

## நேரிசைவெண்பா.

நல்லோர்பிறர்குற்றநாடார்நலந்தெரிந்து *
கல்லார்பிறர்குற்றங்காண்பரோ........அல்லாத
என்போல்வாரென்னையிகழ்வரோவென்கவிக்குப்
பின்பாரோகாண்பார்பிழை. *

ஈதலறந்தீவினைவிட்டீட்டல்பொருளெஞ்ஞான்றுங்
காதலிருவர்க்குங்கருத்தொருமித்........தாதரவு
பட்டதேயின்பம்பரனைநினைந்திம்மூன்றும் *
விட்டதேபேரின்பவீடு. *



உ

கணபதிதுணை.

# ஔவைகுறள்.



## வீட்டுநெறிப்பால்.

[ பிறப்பினிலைமை. ]

ஆதியாய்நின்றவறிவுமுதலெழுத்
தோதியநூலின்பயன் ........................ க

பரமாயசத்தியுட்பஞ்சமாபூதந்
தரமாறிற்றோன்றும்பிறப்பு ........................ உ

ஓசைபரிசமுருவஞ்சுவைநாற்றம்
ஆசைபடுத்துமளறு ........................ ௩

தருமம்பொருள்காமம்வீடெனுநான்கும்
உருவத்தாலாயபயன் ........................ ௪

நிலமைந்துநீர்நான்குநீடங்கிமூன்றே
உலவையிரண்டொன்றுவிண் ................ ௫.

மாயன்பிரமனுருத்திரன்மகேசனே
டாயுஞ்சிவமூர்த்தியைந்து .................. ௬.

மாலயனங்கியிரவிமதியுமையோ
டேலுந்திகழ்சத்தியாறு .................. ௭.

தொக்குதிரத்தோடூன்மூளைநிணமென்பு
சுக்கிலந்தாதுகளேழு .................... ௮.

மண்ணொடுநீரங்கிமதியொடுகாற்றிரவி
விண்ணெச்சமூர்த்தியோரெட்டு ............ ௯.

இவையெல்லாங்கூடியுடம்பாயவொன்றி
னவையெல்லாமானதுவிந்து ............... ௰.

[ உடம்பின்பயன். ]

உடம்பினைப்பெற்றபயனாவதெல்லாம்
உடம்பினிலுத்தமனைக்காண் .............. ௧.
உணர்வாவதெல்லாமுடம்பின்பயனே
யுணர்கவுணர்வுடையார் .................. ௨.
ஒருபயனாவதுடம்பின்பயனே
தருபயனுஞ்சங்கரனைச்சார் ................ ௩.
பிறப்பினாற்பெற்றபயனாவதெல்லாந்
துறப்பதாந்தூநெறிக்கட்சென்று........... ௪.
உடம்பினாலன்றியுணர்வுதானில்லை
யுடம்பினாலுன்னியதேயாம் ............. ௫.
மாசற்றகொள்கைமனத்திலடைந்தக்கால்
ஈசனைக்காட்டுமுடம்பு ................... ௬.
ஓசையுணர்வுகளெல்லாந்தருவிக்கும்
நேசத்தாலாயவுடம்பு .................. ௭.
உயிர்க்குறுதியெல்லாமுடம்பின்பயனே
அயிர்ப்பின்றியாதியைநாடு ............. ௮.
உடம்பினாற்பெற்றபயனாவதெல்லாம்
திடம்படவீசனைத்தேடு ................. ௯.
அன்னத்தாலாயவுடம்பின்பயனெல்லா
முன்னோனைக்காட்டிவிடும் ....... ௰. ஆக ௨௰.

[ உள்ளுடம்பினிலைமை. ]

கற்கலாங்கேட்கலாங்கண்ணாரக்காணலாம்
உற்றுடம்பாலாயவுணர்வு .................. க.
வெள்ளிபொன்மேனியதொக்கும்வினையுடைய
உள்ளுடம்பினுயவொளி ................. உ.
சென்றுண்டுவந்துதிரிதருமுள்ளுடம்
பென்றுங்கெடாததிது .................. ௩.
வருபயனுண்டுமகிழ்ந்துடனுநிற்கும்
ஒருபயனைக்காட்டுமுடம்பு ............... ௪.
அல்லற்பிறப்பையகற்றுவிக்குமாய்ந்தாய
தொல்லையுடம்பின்றொடர்பு ............... ரு.
நல்வினையுந்தீவினையுமுண்டுதிரிதருஞ்
செய்வினைக்கும்வித்தாமுடம்பு ........... சா.
உள்ளுடம்பின்வாழ்வனவொன்பதுமேழைக்
கள்ளவுடம்பாகிவிடும் .................. எ.
பொய்க்கெல்லாம்பாசனமாயுள்ளதற்கோர்வித்தாகு
மெய்க்குள்ளாமாயவுடம்பு .............. அ.
வாயுவினுலாயவுடம்பின்பயனே
ஆயுவினெல்லையது .................... கூ.
ஒன்பதுவாசலுமொக்கவடைத்தால்
அன்பதிலொன்றுமரன். ............ ய ஆ௱ய.

[நாடிதாரணை.]

எழுபத்திராயிரநாடியவற்றுள்
முழுபத்துநாடிமுதல்.................௧.
நரம்பெனுநாடியிவையினுக்கெல்லாம்
உரம்பெறுநாடியொன்றுண்டு............௨.
உந்திமுதலாயுறுமுடிகீழ்மேலாய்ப்
பந்தித்துநிற்கும்பரிந்து..................௩.
காலொடுகையினடுவிடைத்தாமரை
நூல்போலுநாடிநுழைந்து..............௪.
ஆதித்தன்றன்கதிர்போலவந்நாடிகள்
பேதித்துத்தாம்பரந்தவாறு ...........௫.
மெய்யெல்லாமாகிநரம்போடெலும்பிசைந்து
பொய்யில்லைநாடிப்புணர்வு.............௬.
உந்திமுதலாகியோங்காரத்துட்பொருளாய்
நின்றதுநாடிநிலை.....................௭.
நாடிகளூடுபோய்ப்புக்கநலஞ்சுடர்தான்
வீடுதருமாம்விரைந்து.................௮.
நாடிவழக்கமறிந்துசெறிந்தடங்கி
நீடொளிகாண்பதறிவு..................௯.
அறிந்தடங்கிநிற்குமந்நாடிகடோறுஞ்
செறிந்தடங்கிநிற்குஞ்சிவம்......ம, ஆ, சம.

[ வாயுதாரணை. ]

மூலத்தினிற்றோன்றிமுடிவிலிருநான்காகிக்
  கால்வெளியிற்பன்னிரண்டாங்காண் ........ ௧.
இடைபிங்கலைகளிரேசகமாற்றில்
  அடையுமரனாருள் .................. ௨.
அங்குலியால்மூடிமுறையாலிரேசிக்கில்
  பொங்குமாம்பூரகத்தினுள் ............. ௩.
எண்ணிலிரூழியுடம்பாயிரேசிக்கில்
  உண்ணிலைமைபெற்றதுணர்வு ............ ௪.
மயிர்க்கால்வழியெல்லாமாய்கின்றவாயு
  உயிர்ப்பின்றியுள்ளேபதி............... ௫.
இரேசிப்பதுபோலப்பூரித்துநிற்கில்
  தராசுமுனைநாக்கதுவேயாம்........... ௬.
கும்பகத்தினுள்ளேகுறித்தரனைத்தாரேக்கில்
  தும்பிபோனிற்குந்தொடர்ந்து............. ௭.
இரேசகபூரககும்பகமாற்றில்
  தராசுபோனிற்குந்தலை ................ ௮.
வாயுவழக்கமறிந்துசெறிந்தடங்கில்
  ஆயுட்பெருக்கமுண்டாம் ............... ௯.
போகின்றவாயுபொருந்திற்சிவமொக்கும்
  தாழ்கின்றவாயுவடக்கு............ ௰. அதி ௫௰.

[ அங்கிதாரணை. ]

அந்தத்திலங்கியழல்போலத்தானோக்கில்
பந்தப்பிறப்பறுக்கலாம் . . . . . . . . . . . . . . . . க.
உள்ளும்புறம்புமொருங்கக்கொழுவூறில்
கள்ளமலமறுக்கலாம் . . . . . . . . . . . . . . . . . . . உ.
எரியுந்தழல்போலவுள்ளுறநோக்கில்
கரியுங்கனலுருவமாம் . . . . . . . . . . . . . . . . . . . ங.
உள்ளங்கிதன்னையொருங்கக்கொழுவூறில்
வெள்ளங்கிதானும்விளைந்து . . . . . . . . . . . . . . ச.
உந்தியினுள்ளேயொருங்கச்சுடர்பாய்ச்சில்
அந்தியழலுருவமாம் . . . . . . . . . . . . . . . . . . . ரு.
ஐயைந்துமாயவகத்துளெரிநோக்கில்
பொய்யைந்தும்போகும்புறம் . . . . . . . . . . . சா.
ஐம்பதுமொன்றுமழல்போலத்தானோக்கில்
உம்பவொளியாய்விடும் . . . . . . . . . . . . . . . . . எ.
தூண்டுஞ்சுடரைத்துளங்காமற்றானோக்கில்
வேண்டுங்குறைமுடிக்கலாம் . . . . . . . . . . . . . அ.
உள்ளத்தாலங்கியொருங்கக்கொழுவூறில்
மெள்ளத்தான்வீடாம்விளைந்து . . . . . . . . . . கூ.
ஒள்ளிதாயுள்ளசுடரையுறநோக்கில்
வெள்ளியாமாலைவிளக்கு . . . . . . . . . ய. அ-சா-ய.

[ அமுததாரணை. ]

அண்ணாக்குத்தன்னையடைத்தங்கமிர் துண்ணில்
விண்ணோர்க்குவேந்தனுமாம் ............ க.
ஈரொண்கலையினிறைந்தவமிர் துண்ணில்
பூரணமாகும்பொலிந்து ............... உ.
ஓங்காரமானகலசத்தமிர் துண்ணில்
போங்காலமில்லைபுரிந்து ............... ௩.
ஆனகலசத்தமிர்தையறிந் துண்ணில்
போனகம்வேண்டாமற்போம் ............ ௪.
ஊறுமமிர்தத்தையுண்டியுறப்பார்க்கில்
கூறும்பிறப்பறுக்கலாம் ............... ௫.
ஞானவொளிவிளக்கானல்லவமிர் துண்ணில்
ஆனசிவயோகியாம் ..................... ௬.
மேலையமிர்தைவிலங்காமற்றூனுண்ணில்
காலனைவஞ்சிக்கலாம் ................. எ.
காலனைநோக்கக்கலந்தவமிர் துண்ணில்
ஞானமதுவாநயந்து ..................... அ.
எல்லையிலின்னமிர் தமுண்டாங்கினிதிருக்கில்
தொல்லைமுதலொளியேயாம் ............. ௯.
நிலாமண்டபத்தினிறைந்தவமிர் துண்ணில்
உலாவலாமந்தரத்தின்மேல். ......... ௰. ஆக எ௰.

## [அர்ச்சனை.]

## [ உள்ளுணர்தல். ]

எண்ணிலியூழிதவஞ்செய்திங்கிசனே
  உண்ணிலைமைபெற்றதுணர்வு ............... க.
பல்லூழிகாலம்பயின்றரனையர்ச்சித்து
  நல்லுணர்வுபெற்றநலம் ................. உ.
எண்ணற்கரியவருந்தவத்தாலன்றே
  நண்ணப்படுமுணர்வுதான் ................ ங.
முன்னைப்பிறப்பின்முயன்றதவத்தினால்
  பின்னைப்பெறுமுணர்வுதான் ............. ச.
சாயக்கிலேசமுணர்ந்தபயனன்றே
  ஓயாவுணர்வுபெறல் ..................... ரு.
பண்டைப்பிறவிப்பயனாந்தவத்தினால்
  கண்டங்குணர்வுபெறல் .................. சா.
போதத்தவத்தின்பயனும்பிறப்பின்மை
  ஆராய்ந்துணர்வுபெறின் ................. எ.
ஞானத்தாலாயவுடம்பின்பயனன்றே
  மோனத்தாலாயவுணர்வு .................. அ.
ஆதியோடொன்றுமறிவைப்பெறுவதுதான்
  நீதியாற்செய்ததவம் .................... கூ.
காடுமலையுங்கருதித்தவஞ்செய்தால்
  கூடுமுணர்வின்பயன் ............ ம. ஆ கூம.

[ பத்தியுடைமை. ]

பத்தியாலுள்ளேபரிந்தரனைத்தானோக்கில்
முத்திக்குமூலமது .......................... ௧.
பாடியுமாடியும்பல்காலும்நேசித்துத்
தேடுஞ்சிவசிந்தையால் .................... ௨.
அன்பாலழுதுமலறியுமாள்வானை
யென்புருகியுள்ளேநினை .................... ௩.
பூசனைசெய்துபுகழ்ந்துமனங்கூர்ந்து
நேசத்தாலீசனைத்தேடு ...................... ௪.
கண்ணுளுறப்பார்த்துக்காதலாற்றானோக்கில்
உண்ணுமேயீசனொளி ........................ ௫.
நல்லானைப்பூசித்துநாதனெனவுருகில்
நில்லாதோவீசனிலை ........................ ௬.
அடியார்க்கடியராயன்புருகித்தம்முள்
படியொன்றிப்பார்த்துக்கொளல் .......... ௭.
ஈசனைக்கருதியெல்லாவுயிர்களையும்
நேசத்தால்நீநினைந்துகொள் .............. ௮.
மெய்ம்மயிர்கூரவிதிர்ப்புற்றுவேர்த்தெழுந்து
பொய்ம்மையிலீசனைப்போற்று ............ ௯.
செறிந்தறிந்துநாடிச்செவ்விதாயுள்ளே
அறிந்தரனையாய்ந்துகொளல் ........ ௰. அ-ம.

[ வீட்டுநெறிப்பால்முற்றிற்று. ]

## திருவருட்பால்.

### [ அருள்பெறுதல். ]

அருளிலலன்றியகத்தறிவில்லை
அருளின்மலமறுக்கலாம் ................ க.
இருளைக்கடிந்தின்றிறைவனருளால்
தெருளுஞ்சிவசிந்தையாம் ................ உ.
வாய்மையாற்பொய்யாமனத்தினால்மாசற்ற
தூய்மையாமீசனருள் ................ ௩.
ஒவ்வகத்துணின்றசிவனருள்பெற்றக்கால்
அவ்வகத்துளானந்தமாம் ................ ௪.
உன்னுங்கருமமுடிக்கலாமொள்ளிதாய்
மன்னுமருள்பெற்றக்கால் ................ ௫.
எல்லாப்பொருளுமுடிக்கலாமீசன்றன்
தொல்லையருள்பெற்றக்கால் ................ ௬.
சிந்தையுணின்றசிவனருள்பெற்றக்கால்
பந்தமாம்பாசமறும் ................ ௭.
மாசற்றகொள்கைமதிபோலத்தான்றோன்றும்
ஈசனருள்பெற்றக்கால் ................ ௮.
ஆவாவென்றோதியருள்பெற்றார்க்கல்லாது
தாவாதோஞானவொளி ................ ௯.
ஓவாச்சிவனருள்பெற்றாலுனாயின்றித்
தாவாதவின்பந்தரும் ................ ௰. அ௱௰.

## [ நினைப்புறுதல். ]

கருத்துறப்பார்த்துக்கலங்காமலுள்ளத்
திருத்திச்சிவனை நினை .... ................க.
குண்டலியினுள்ளேகுறித்தரனைச்சிந்தித்து
மண்டலங்கள்மேலாகப்பார்................உ.
ஓர்மின்கள்சிந்தையிலொன்றச்சிவன்றன்னைப்
பார்மின்பழம்பொருளேயாம்................ந.
சிக்கெனத்தேர்ந்துகொள்சிந்தையிலீசனை
மிக்கமலத்தைவிடு .........................ச.
அறிமின்கள்சிந்தையிலாதாரத்தைச்சேர்ந்
துறுமின்களும்மூளேயோர்ந்து ..........ரு.
நிற்றம்நினைந்திரங்கிநின்மலனையொன்றுவிக்கில்
முற்றுமவனொளியேயாம்.................சா
ஓசையுணர்ந்தங்கேயுணர்வைப்பெறும்பரிசால்
ஈசன்கருத்தாயிரு..........................எ.
இராப்பகலன்றியிருசுடர்ச்சிந்திக்கில்
பராபரத்தோடொன்றலுமாம்............அ.
மிக்கமனத்தால்மிகநினைந்துசிந்திக்கில்
ஒக்கச்சிவனுருவமாம்.....................கூ.
வேண்டுவார்வேண்டும்வகைதான்விரிந்தெங்குங்
காண்டற்கரிதாஞ்சிவம்.........ய.அ௱உய.

## [ தெரிந்துதெளிதல். ]

தேறித்தெளியின் சிவமென்றேயுள்ளுணர்வில்
கூறியபல்குணமுமாம் ................... க.
உண்டில்லையென்னுமுணர்வையறிந்தக்கால்
கண்டில்லையாகுஞ்சிவம் ................... உ.
ஒருவர்க்கொருவனேயாகுமுயிர்க்கெல்லாம்
ஒருவனேபல்குணமுமாம் ................... ௩.
எல்லார்க்குமொன்றேசிவமாவதென்றுணர்ந்த
பல்லோர்களுமுண்டோபவம் ................... ௪.
ஆயுமிரவியுமொன்றேயனைத்துயிர்க்கும்
ஆயுங்காலொன்றேசிவம் ................... ௫.
ஓவாதவொன்றேபலவாமுயிர்க்கெல்லாந்
தேவானதென்றேதெளி ................... ௬.
தம்மையறியாதார் தாமறிவோமென்பதென்
செம்மையாலீசன்றிறம் ................... ௭.
எல்லாவுலகத்திருந்தாலுமேத்துவர்கள்
நல்லுலகநாதனடி ................... ௮.
உலகத்திற்பட்டவுயிர்க்கெல்லாமீசன்
நிலவுபோனிற்கும்நிறைந்து ................... ௯.
உலகத்தில்மன்னுமுயிர்க்கெல்லாமீசன்
அலகிறந்தவாதியேயாம் ........௰. ஆ௨௱௩௰.

## [ கலைஞானம். ]

சத்தியாஞ்சந்திரனைச்செங்கதிரோனாடுருவில்
முத்திக்குமூலமது .......................... க.
அயனங்கொள்சந்திரனாலாதித்தனென்றில்
நயனமாமுத்திக்குவீடு ........................ உ.
அஞ்சாதுமாயாதறம்பொருளின்பமுந்
துஞ்சாதவர்துறக்குமாறு ...................... ௩.
ஈசனொடொன்றிலிசையாப்பொருளில்லை
தேசவிளக்கொளியேயாம் ...................... ௪.
தாஞ்செய்வினையெல்லாந்தம்மையறவுணரில்
காஞ்சனமேயாகுங்கருத்து ..................... ரு.
கூடகமானகுறியெழுத்தைத்தானறியில்
வீடகமாகும்விரைந்து ......................... சா.
வீடகமாகவிழைந்தொல்லைவேண்டுமேல்
கூடகத்திற்சோதியோடொன்று ................. எ.
பூரித்துநின்றசிவனைப்புணரவே
பாரித்ததாகுங்கருத்து ........................ அ.
ஓசகமாற்றியிடையறுதேநிற்கில்
பூரிப்பதுள்ளேசிவம் ......................... கூ.
சிந்தையில்நின்றநிலைவிசும்பிற்சாக்கிரமாம்
சந்திரனிற்றோன்றுமுணர்வு......ய. ஆ—ாசய.

## [ உருவொன்றிநிற்றல். ]

எள்ளகத்தெண்ணெயிருந்ததனையொக்குமே
உள்ளகத்தீசனொளி .................... ௧.
பாலின்கணெய்போற்பரந்தெங்குநிற்குமே
நூலின்கணீசனுழைந்து .................... ௨.
கரும்பினிற்கட்டியுங்காய்பாலினெய்யும்
இரும்புண்டநீருமியல்பு .................... ௩.
பழத்தினிரதம்போற்பரந்தெங்குநிற்கும்
வழுத்தினாலீசனிலை .................... ௪.
தனுவொடுதோன்றுமேதானெல்லாமாகி
யணுவதுவாய்நிற்குமது .................... ௫.
வித்துமுளைபோல்விரிந்தெங்குநிற்குமே
ஒத்துளேநிற்குமுணர்வு .................... ௬.
அச்சமாங்காரமகத்தடக்கினாற்பின்னை
நிச்சயமாமீசனிலை .................... ௭.
மொட்டினீர்நாற்றமுளைமுட்டைபோலுமே
விட்டுளேநிற்குமியல்பு .................... ௮.
நினைப்பவர்க்குநெஞ்சத்துள்நின்மலனாய்நிற்கும்
அனைத்துயிர்க்குந்தானுமவன் .................... ௯.
ஓசையினுள்ளேயுதிக்கின்றதொன்றுண்டு
வாசமலர்நாற்றம்போல்வந்து....௰. அ_ ௱௫௰.

[ முத்திகாண்டல். ]

மனத்தோடுறுபுத்தியாங்காரஞ்சித்தம்
அனைத்தினுமில்லையது ................. க.
வாக்குங்கருத்துமயங்குஞ்சமயங்கள்
ஆக்கியநூலினுமில் ..................... உ.
உருவமொன்றிலலையுணர்வில்லையோதும்
அருவமூர்த்தானதுவேயாம் ............... ங.
தனக்கோருருவில்லைதானெங்குமாகி
மனத்தகமாய்நிற்குமது ................... ச.
பெண்ணணலியென்னும்பேரொன்றிலதாகி
விண்ணாகிநிற்கும்வியப்பு ................ ரு.
அனைத்துருவமாயவறிவையகலில்
தினைத்துணையுமில்லைசிவம் ............. சு.
துனிமுகத்துக்காதியாத்துன்னறிவின்றி
அணிதாரிரண்டுவிரல் ..................... எ.
மயிர்முனையிற்பாதிமனத்தறிவுண்டேல்
அயிர்ப்புண்டங்காதிநில .................. அ.
தற்பரமானசதாசிவத்தோடொன்றில்
உற்றறிவில்லையுயிர்க்கு ................. கூ.
உறக்கமுணர்வுபசிகெடப்பட்டால்
பிறக்கவும்வேண்டாபிறப்பு....: ய. ஆ௱௬ய.

[ உருபாதீதம். ]

கருவின்றிவீடாங்கருத்துறவேண்டில்
உருவின்றிநிற்குமுணர்வு ................ ௧.

பிறத்தலொன்றின்றிப்பிறவாமைவேண்டில்
அறுத்துருவமாற்றியிரு ................ ௨.

உருவங்களெல்லாமறுத்தறமாற்றில்
கருவேதுமில்லைதனக்கு ................ ௩.

கறுப்புவெளுப்புசிவப்புறுபொன்பச்சை
யறுத்துருவமாற்றியிரு ................ ௪.

அனைத்துருவமெல்லாமறக்கெடுத்துநின்றால்
பினைப்பிறப்பில்லையாம்வீடு ................ ௫.

நினைப்புமறப்பற்றுநிராகரித்துநின்றால்
தனக்கொன்றுமில்லைபிறப்பு ................ ௬.

குறித்துருவமெல்லாங்குறைவின்றிமாற்றில்
மறித்துப்பிறப்பில்லைவீடு ................ ௭.

பிதற்றுமுணர்வையறுத்துப்பிரவஞ்ச
விகற்பமுணர்வதேவீடு ................ ௮.

பிறப்பறுக்கவீடாம்பேருவமையின்றி
அறுத்துருவமாற்றியிரு ................ ௯.

ஓசையுணர்வோடுயிர்ப்பின்மையற்றக்கால்
பேசவும்வேண்டாபிறப்பு ........ ௰. அ௱எ௰.

[பிறப்பறுதல்.]

தன்னையறியுமறிவுதனைப்பெறில்
பின்னைப்பிறப்பில்லைவீடு............... க
அறம்பாவமாயுமறிவுதனைக்கண்டால்
பிறந்துழலவேண்டாபெயர்ந்து........... உ
சிவனுருவந்தானாய்ச்செறிந்தடங்கிநிற்கில்
பவநாசமாகும்பரிந்து................. ௩
உறக்கமுணர்வோடுயிர்ப்பின்மையற்றால்
பிறப்பின்றிவீடாம்பரம்................ ௪
நினைப்புமறப்புநெடும்பசியுமற்றால்
அனைத்துலகும்வீடாமது................ ரு
உடம்பிரண்டுங்கெட்டாலுறுபயனொன்றுண்டு
திடம்படுமீசன்றிறம்................... ௬
தன்னையறிந்துசெறிந்தடங்கித்தானற்றால்
பின்னைப்பிறப்பில்லைவீடு............... ௭
மருளன்றிமாசறுக்கின்மாதுவெளியாய்
இருளின்றிநிற்குமிடம்................ அ
விகாரங்கெடமாற்றிமெய்யுணர்வுகண்டால்
அகாரமாங்கண்டீரறிவு................ ௯
சிந்தையாங்காரஞ்செறிபுலனற்றக்கால்
மூத்தியேயாகுமாம்வீடு......... ய. ஆ—ா அய.

[ தூயவொளிகாண்டல். ]

தோன்றியதெல்லாந்தொடக்கறுத்துத்தூய்வெளியாய்த்
தோன்றியக்காற்றூயவொளி.............. ௧.

தெளிவாயதேசவிளக்கொளியைக்காணில்
வெளியாயவீடதுவேயாம்................. ௨.

மின்போலுருவவிளக்கொளிபோல்மேற்காணில்
முன்போலமூலம்வரும்.................... ௩.

பளிங்குவலம்புரிபாணிறத்ததாகில்
துளங்கொளியாந்தூயநெறி................ ௪.

சங்குநிறம்போற்றவளவொளிகாணில்
அங்கையினெல்லியேயாம்................. ௫.

துளங்கியதூண்டாவிளக்கொளிகாணில்
விளங்கியவீடாம்விரைந்து................ ௬.

மின்மினிபோன்றவிளக்காகத்தான்றோன்றில்
அன்னப்பறவையேயாம்..................... ௭.

உள்ளொளிதோன்றிலுணரிலருளொளி
அவ்வொளியாதியொளி.................... ௮.

பரந்தவிசும்பிற்பரந்தவொளிகாணில்
பரம்பரமேயாயவொளி................... ௯.

ஆதியொளியாகியாள்வானுந்தானாகி
ஆதியவனுருவமாம்.......... ௰. ஆ ௩௰.

[ சதாசிவம். ]

பத்துத்திசையும்பரந்தகடலுலகும்
ஒத்தெங்குநிற்குஞ்சிவம்............... க.

விண்ணிறைந்துநின்றுவிளங்குஞ்சுடரொளிபோல்
உண்ணிறைந்துநிற்குஞ்சிவம்............ உ.

ஆகமுஞ்சீவனுமாசையந்தானுகி
ஏகமாய்நிற்குஞ்சிவம்.................. ௩.

வாயுவாய்மன்னுயிராய்மற்றவற்றினுட்பொருளாய்
ஆயுமிடந்தானேசிவம்.................. ௪.

எண்ணிறைந்தயோனிபலவாய்ப்பரந்தெங்கும்
உண்ணிறைந்துநிற்குஞ்சிவம்.............. ௫.

ஒன்றேதானுழிமுதலாகிப்பல்லுயிர்க்கும்
ஒன்றாகிநிற்குஞ்சிவம்.................. ௬.

மூலமொன்றாகிமுடிவொன்றாயெவ்வுயிர்க்குங்
காலமாய்நிற்குஞ்சிவம்.................. ௭.

மண்ணிற்பிறந்தவுயிர்க்கெல்லாந்தானுகி
விண்ணகமேயாகுஞ்சிவம்............ அ.

தோற்றமதுவீடாகித்தொல்லைமுதலொன்றாகி
ஏத்தவருமீசனுளன்.................. கூ.

நிற்கும்பொருளூர்நடப்பனவுந்தானுகி
உற்றெங்குநிற்குஞ்சிவம்..........ய. ஆ உ௩.

[ திருவருட்பால்முற்றிற்று. ]

[தன்பால்.]

## [குருவழி.]

தன்பாலறியுந்தவமுடையார்நெஞ்சகத்துள்
அன்பாயிருக்குமரன் ................ க.

சிந்தைசிவமாகக்காண்பவர்சிந்தையில்
சிந்தித்திருக்குஞ்சிவம் ................ உ.

குருவினடிபணிந்துகூடுவதல்லார்க்
கருவமாய்நிற்குஞ்சிவம் ................ ௩.

தலைப்பட்டசற்குருவின்சன்னிதியிலல்லால்
வலைப்பட்டமானதுவேயாம் ................ ௪.

நெறிபட்டசற்குருநேர்வழிகாட்டில்
பிறிவற்றிருக்குஞ்சிவம் ................ ௫.

நல்லனநூல்பலகற்பினுங்காண்பரிதே
எல்லையில்லாதசிவம் ................ ௬.

நினைப்புமறப்புமில்லாதவர்நெஞ்சந்
தனைப்பிரியாதுசிவம் ................ ௭.

ஒன்றிலொன்றுதமனமுடையாருடல்
என்றுமொன்றுதுசிவம் ................ ௮.

நாட்டமில்லாதவிடம்நாட்டமறிந்தபின்
மீட்டுவிடாதுசிவம் ................ ௯.

பஞ்சமாசத்தமறுப்பவர்க்கல்லாஅல்
அஞ்சலென்றதுசிவம் .... ௰. .... ஆ உ௱௰.

[ அங்கியிற்பஞ்சு ]

அங்கியிற்பஞ்சுபோலாகாயத்தேநினையில்
சங்கிக்கவேண்டாசிவம் ................. க.
மெய்ப்பாலறியாதமூடர்தநெஞ்சத்தின்
அப்பாலதாகுஞ்சிவம் ................. உ.
நெஞ்சகத்துளொக்கிநினைப்பவர்க்கல்லாஅல்
அஞ்சலென்றதுசிவம் ................. ௩.
பற்றிலாதொன்றினைப்பற்றினலல்லது
கற்றதனாலென்னபயன் ................. ௪.
தம்மையறிவாரைத்தாமறிந்துகொண்டபின்
தம்மையறிவரோதான் ................. ரு.
அசையையறிந்துள்ளேயழலெழநோக்கில்
இசையாதுமண்ணிற்பிறப்பு ................. சா.
இமையாதநாட்டத்திருந்துணர்வாருக்
கமையாதவானந்தமாம் ................. எ.
துரியங்கடந்தசுடரொளியைக்கண்டால்
மரணம்பிறப்பில்லைவீடு ................. அ.
மதிபோலுடம்பினைமாசறநோக்கில்
விதிபோயகலவிடும் ................. கூ.
சீவன்சிவலிங்கமாகத்தெளிந்தவர்தம்
பாவநசிக்கும்பரிந்து .....ய.....ஆஉஉய.

[ மெய்யகம். ]

மெய்யகத்தினுள்ளேவிளங்குஞ்சுடர்நோக்கில்
கையகத்தினெல்லிக்கனி . . . . . . . . . . . . . . . . க.

கரையற்றசெல்வத்தைக்காணுங்காலத்தில்
உரையற்றிருப்பதுணர்வு . . . . . . . . . . . . . . . . உ.

உண்டுபசிதீர்ந்தாற்போலுடம்பெல்லாஅங்
கண்டுகொள்காதல்மிகும் . . . . . . . . . . . . ௩.

உரைசெயுமோசையுரைசெய்பவர்க்கு
நரைதிரையில்லைநமன் . . . . . . . . . . . . . . . . ௪.

தோன்றாததூயவெளிதோன்றியக்காலூனந்
தோன்றாமற்காப்பதறிவு . . . . . . . . . . . . . . . . ௫.

வாக்குமனமுமிறந்தபொருள்காணில்
ஆக்கைக்கழிவில்லையாம் . . . . . . . . . . . . . . . . ௬.

கண்ணகத்தேநின்றுகளிதருமேகாணுங்கால்
உன்னகத்தேநின்றவொளி . . . . . . . . . . . . . . . . ௭.

ஆனந்தமானவருளையறிந்தபின்
தானந்தமாகுமவர்க்கு . . . . . . . . . . . . . . . . ௮.

மறவாமற்காணும்வகையுணர்வார்க்
கிறவாதிருக்கலுமாம் . . . . . . . . . . . . . . . . ௯.

விண்ணிறைந்துநின்றபொருளேயுடம்பதன்
உண்ணிறைந்துநின்றவொளி. . . . . ௰ ஆ உ௫௰.

[ கண்ணாடி. ]

கண்ணாடி தன்னிலொளிபோலுடம்பதனுள்
உண்ணாடி நின்றவொளி ...................... க.
அஞ்சுபுலனின்வழியறிந்தாற்பின்னைத்
துஞ்சுவதில்லையுடம்பு ...................... உ.
நாபியகத்தேநலனுறநோக்கிடில்
சாவதுமில்லையுடம்பு ...................... ௩.
கண்டத்தளவிற்கடியவொளிகாணில்
அண்டத்தராகுமுடம்பு ...................... ௪.
சந்திரனுள்ளேதழலுறநோக்கினால்
அந்தரமாகுமுடம்பு ...................... ரு.
ஆர்க்குந்தெரியாவுருவந்தனைநோக்கில்
பார்க்கும்பரமாமவன் ...................... ௬.
வண்ணமில்லாதவடிவையறிந்தபின்
விண்ணவராகுமுடம்பு ...................... எ.
நெற்றிக்குநேரேநிறைந்தவொளிகாணில்
முற்றுமழியாதுடம்பு ...................... அ.
மாதூவெளியின்மனமொன்றவைத்தபின்
போதகமாகுமுடம்பு ...................... கூ.
சுத்தமோடொன்றிமனமுமிறந்தக்கால்
முற்றுமழியாதுடம்பு ........ ௰. ஆ உ௪௰.

[சூனியகாலமறிதல்.]

நிரவியழலுருவாய் நீண்டவெளிகாணில்
அரவணையாகுமுடம்பு ................... க.
உருவந்தழலாகவுள்ளத்தேசென்று
புருவத்திடையிருந்துபார் ................... உ.
புருவத்திடையிருந்துபுண்ணியனைக்காணில்
உருவற்றுநிற்குமுடம்பு ................... ௩.
அகம்புறம்போராப்பொருளையறியில்
உகம்பலகாட்டுமுடம்பு ................... ௪.
ஆவிபாழ்போகாதடக்கியிருந்தபின்
ஓவியமாகுமுடம்பு ................... ரு.
அஞ்சுமடக்கியறிவோடிருந்தபின்
துஞ்சுவதில்லையுடம்பு ................... சா.
தீயாகவுள்ளேதெளிவுறநோக்கினல்
மாயாதுபின்னையுடம்பு ................... எ.
தானந்தமின்றித்தழலுறநோக்கிடில்
ஆனந்தமாகுமுடம்பு ................... அ.
ஒழிவின்றிநின்றபொருளையுணரில்
அழிவின்றிநிற்குமுடம்பு ................... கூ.
பற்றற்றுநின்றபழம்பொருளைச்சிந்திக்கில்
முற்றுமழியாதுடம்பு ................... ய் அ௲ உருய.

## [ சிவயோகநிலை. ]

அடிமிசைவாயுவடுத்தடுத்தேகி
முடிமிசையோடிமுயல் ................. ௧.

உண்ணாடிவாயுவதனையுடனிரப்பி
விண்ணோடுமெள்ளவிடு ................. ௨.

மெள்ளவிரேசித்துமெய்விம்மிப்பூரித்துக்
கொள்ளுமின்கும்பங்குறித்து ................. ௩.

இரேசகமுப்பத்திரண்டதுமாத்திரை
பூரகம்பத்தாறுபுகும் ................. ௪.

கும்பகநாலோடறுபதுமாத்திரை
தம்பித்திடுவதுதான் ................. ௫.

முன்னமிரேசிமுயலுபின்பூரகம்
பின்னதுகும்பம்பிடி ................. ௬.

ஈரைந்தெழுபத்திராயிரநாடியுஞ்
சேருமின்வாயுச்செயல் ................. ௭.

வாசலீரைந்துமயங்கியவாயுவை
யீசன்றன்வாசலிலேற்று ................. ௮.

நயாவினில்வாயுவலத்திலியங்கில்
தியானசமாதிகள்செய் ................. ௯.

ஆதியாமூலமறிந்தஞ்செழுத்தினைப்
பேதியாதோதுபிணை ........... ௰ ஆ உ௬௰.

[ ஞானநிலை. ]

தற்புருடமாமுகந்தன்னிற்றனியிருந்
துற்பனமஞ்சையுரை . . . . . . . . . . . . . . . . . . . க.

தற்புருடமாமுகமேற்றாரகைதன்மேலே
நிற்பதுபேரொளிநில் . . . . . . . . . . . . . . . . . . . உ.

ஓதியதற்புருடத்தடியொவ்வவே
பேதியாதோதுபினை . . . . . . . . . . . . . . . . . . . ௩.

கொழுந்துறுவன்னிகொழுவுறவொவ்வில்
எழுந்தாரகையாமிது . . . . . . . . . . . . . . . . . . . ௪.

மறித்துக்கொளுவிடுவன்னிநடுவே
குறித்துக்கொளுஞ்சீயைக்கூட்டு . . . . . . . . . . . ரு.

காலுந்தலையுமறிந்துகலந்திடில்
சாலவும்நல்லதுதான் . . . . . . . . . . . . . . . . . . . சா.

பொன்னொடுவெள்ளியிரண்டும்பொருந்திடில்
அன்னவன்றாளதுவேயாம் . . . . . . . . . . . . . . . . எ.

நின்றவெழுத்துடனில்லாவெழுத்தினை
யொன்றுவிக்கிலொன்றேயுரை . . . . . . . . . . . . . அ.

பேசாவெழுத்துடன்பேசுமெழுத்துறில்
ஆசான்பரனந்தியாம் . . . . . . . . . . . . . . . . . . . கூ.

அழியாவுயிரையவனுடன்வைக்கில்
பழியானதொன்றில்லையார் . . . . . . ய. ஆ. உஎய.

[ ஞானம்பிரியாமை. ]

பிறந்திடமாலிடம்பேராதிருபின்
இறந்திடம்வன்னியிடம் ........................ ௧.
சாகாதிருந்ததலமேமவுனமது
ஏகாந்தமாகவிரு ........................ ௨.
வெளியில்விளைந்தவிளவின்கனிதான்
ஒளியிலொளியாயுறும் ........................ ௩.
மறவாநினையாமவுனத்திருக்கில்
பிறவாரிறவார்பினை ........................ ௪.
குருவாம்பரனந்திகூடல்குறித்தாங்
கிருபோதுநீங்காதிரு ........................ ௫.
சுந்தரச்சோதிதுலங்குமிடமது
மந்திரச்சக்கரமுமாம் ........................ ௬.
தூராதிதூரஞ்சொல்லத்தொலையாது
பாராப்பராபரம்பார் ........................ ௭.
ஈரொளியீதென்றிறைவனுரைத்தனன்
நீரொளிமீதுநிலை ........................ ௮.
அந்தமுமாதியுமில்லாவரும்பொருள்
சுந்தரஞானச்சுடர் ........................ ௯.
இதுமுத்திசாதனமென்றேட்டில்வரைந்து
பதிவைத்தனன்குருபார் ........................ ௰ ஆ உ அ ௰.

[ மெய்ந்நெறி. ]

செல்லல்நிகழல்வருகாலமூன்றினையுஞ்
சொல்லுமவுனத்தொழில் ................ ௧.
பஞ்சிற்படுபொறிபோலப்பரந்திருந்த
துஞ்சாதுஞானச்சுடர் ..................... ௨.
இமைப்பிற்பரந்தங்கொடுங்குமின்போல
நமக்குட்சிவன்செயல்நாடு ................. ௩.
குவித்துமனத்தைக்குவித்துள்ளேயோங்கில்
செவித்துப்பெறுவதேவன் ................. ௪.
காலுந்தலையுமொன்றாகக்கலந்திடம்
நாலாநிலையெனநாடு ....................... ௫.
மூலநிலமிசைமூன்றுநிலத்தினில்
ஆலமருந்துஞ்சிவம் ........................ ௬.
எழுஞ்சுடருச்சியின்மேல்மனம்வைக்கத்
தொழிலொன்றிலாதசுடர் ................... ௭.
அடைத்திட்டவாசலின்மேல்மனம்வைத்துப்
படைத்தவன்தன்னையேபார் ............... ௮.
அறுபதொடாறுவருடமிதனை
உறுதியதாகவுணர் ........................... ௯.
அட்டமாசித்தியடையுமோராண்டினில்
இட்டமிதனைத்தெளி ............ ௰ ஆ. ௨௱௰.

[ தூரியதரிசனம். ]

வன்னியதெட்டுமதியம்பதினாறு
  மூன்னியபன்னிரண்டுமூள் ................ ௧.
சூரியன்வன்னியொன்றாகிடிற்சோமனும்
  பாருமீனிதுபயன் ..... ............... ௨.
மதியொடுவன்னியொன்றாகவேவந்தால்
  கதிரவனுமென்றுகாண் ................ ௩.
மதிக்குட்கதிரவன்வந்தங்கொடுங்கில்
  உதிக்குமாம்பூரணைச்சொல் ................ ௪.
தோற்றுங்கதிரவனுண்மதிபுக்கிடில்
  சாற்றுமமாவாசைதான் ................ ௫.
வன்னிகதிரவன்கூடிடிலத்தனை
  பின்னிவையாகுமெலாம் ................ ௬.
அமாவாசைபூரணையாகுமவர்க்குச்
  சமனுமுயிருடம்புதான் ................ ௭.
அண்டத்திலுமிந்தவாறென்றறிந்திடு
  பிண்டத்திலுமதுவேபேசு ................ ௮.
ஏறுமதியமிறங்கிலுறங்கிடும்
  கூறுமப்பூரணைகொள் ................ ௯.
உதிக்குமதியமுங்கண்டங்குறங்கில்
  மதிக்குமமாவாசையாம் ................ ௰. ஆ ௩௱.

[ உயர் ஞானதரிசனம். ]

கொண்டிடுமண்டலமூன்றங்கிதன்னையிப்
பிண்டமுமூழிபிரியா . . . . . . . . . . . . . . . . . ௧.
வெள்ளிபுதனொடுதிங்களிடமெனத்
தள்ளுமின்காலசரம் . . . . . . . . . . . . . . . . . . ௨.
செவ்வாய்சனிநாயிறுவலமாகவே
கொள்ளிலிவ்வாறிடருமில் . . . . . . . . . . . . . . . ௩.
வளர்பொன்னிடம்பிறைத்தேய்வுவலமாம்
வளர்பிறையென்றேமதி . . . . . . . . . . . . . . . . ௪.
வலத்திற்சனிக்கேயிராப்பகல்வாயு
செலுத்துபோராதுசெயல் . . . . . . . . . . . . . . . ௫.
இயங்கும்பகல்வலமிராவிடம்வாயு
தயங்குறல்நாடிக்குட்டான் . . . . . . . . . . . . . . ௬.
அரசறியாமலவன்பேருணைத்துத்
தனைதனையாண்டசமன் . . . . . . . . . . . . . . . . ௭.
கல்லாதமூடர்திருவுருக்கொண்டிடச்
செல்லாதென்னசெயல் . . . . . . . . . . . . . . . . ௮.
திருவருட்பாலைத்தெரிந்துதெளியில்
குருவிருப்பாமென்றுகொள் . . . . . . . . . . . . . ௯.
கற்கிலுங்கேட்கிலும்ஞானக்கருத்துற
நிற்கிற்பரமவைவீடு . . . . . . . . . . . . . . . . . . ௰.

முற்றிற்று. ஆ ௩௱ய.

முத்திக்கௌவையார்சொல்முந்நூற்றுப்பத்துமுன்
சித்தத்தில்வைத்துத்தெளி . . . . . . . . . . . . . . .

